உ

# ஜாதக லக்கினஸ்புட பாவஸ்புட கணனம்



இது சென்னை முத்தியாலுப்பேட்டை ஐஸ்கூலில் சைன்ஸ் உபாத்தியாயராயிருந்தவரும், கணித சாஸ்திரத்தில் பி. ஏ. பட்டம் வகித்தவரும், நாமகள் சுத்த திருக்கணித பஞ்சாங்க கணிதரும், இராஜ ஜோதிட கணிதம், ஜாதக கணிதம் ஒராம் பாகம் என்ற ஜோதிட கிரகசட்பலம் ஆயுள்கணிதம், ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்ற ஜாதக பலாபலன் கள் நிர்ணயம், பலபாகக் கிரந்தங்களாகிய ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் ஒன்று, இரண்டு, இவைகளின் ஆசிரியரும் பிருஹத் ஜாதகம் பராசர ஹோரை இவைகளின் பதிப்பு ஆசிரியருமாகிய

**C. G. ராஜன், B.A., (Mathematics)**

அவர்களாலும் அவர் குமாரர்

**C. சுப்பிரமணியம் M. A, F. L., அவர்களாலும்**

எழுதப்பட்டது.

கிடைக்கும் இடம் :—

**C. கனகம்மாள் அண்டு கம்பெனி.**

31, ஆயலூர் முத்தையா முதலி தெருவு,

கிருஷ்ணங்குளம் அருகாமை சௌகார்பேட்டை போஸ்டு,

சென்னை.

 1956 Indian Edition.

# முன்னுரை



ஜாதக விஷயத்திலும், பிரஷ்ணே விஷயத்திலும், முகூர்த்த விஷயத்திலும் பலா பலன்களைச் சொல்ல வேண்டியதற்கு லக்கினமும் பாவச்சக்கிரமும் முக்கியமான அம்சங்களாகும். இவைகளில் லக்கினத்தைக் கணிக்கும் வழிகள் அநேகம் உள. அவைகளில் நக்ஷத்திர ஹோராமணி என்ற ஒருவித கால அளவைக்கொண்டு கணிக்கும் வழி ஒரு வழி ஆகும். இவ்வழி தற்கால நவீன வழி ஆகும். இவ் வழியால் லககின ஸ்புடத்தை மற்றெல்லா வழிகளை விட மிகவும் துல்லியமாகக் கணிக்கலாம். இந்தக் காரணத்தினலேதான் ஜோதிடர்களில் சிலர் தற்காலத்தில் நக்ஷத்திர ஹோராமணியைக்கொண்டு லக்கினத்தைக் கணிக்கும் மார்க்கத்தை அநுசரித்து வருகின்றார்கள். இந்த வழி மேல நாட்டு வழி ஆகும். இந்த வழியை ஆங்கில பாஷை தெரிந்தவர்கள மாத்திரம உபயோகப்படுத்தி வருகின்றார்கள். இவ்வழி மேன்மையான வழியானதாலும், இவ்வழியை ஆங்கில பாஷை தெரியாத தமிழ் நாட்டு ஜோதிடர்களும கற்றறிநது உபயோகப் படுத்துவது மிகவும் நலமான காரியமென்று தோற்றியதால் இந்த நவீனமான முறையைத் தமிழ் நாட்டில் பெரும்பான்மையோர் கையாள வேணுமெனற கொள்கையுடன் இந்தப் புத்தகத்தைக் சிலருடைய கோரிக்கைக்கிணங்கித் தமிழில் கூட * எழுதியிருக்கிறது,

பாவச் சக்கிரம் என்ற துவாதச பாவங்கள் அடங்கிய சக்கிரத்தைப்பற்றி இந்துதேச ஜோதிட சாஸ்திரங்களிலும் மேல் நாட்டு ஜோதிட சாஸதிரங்களிலும் சொல்லி யிருக்கின்றது. இந்துதேச ஜோதிட சாஸ்திரத்தில் இராசிகள் இருக்கின்ற பவனச் சக்கிரத்தைப்பங்கிட்டுப் பாவங்கள் ஏற்படுத்துவதில் ஒரே விதமானபாவப் பகிாதல் (House-Division) இருக்கிறது இந்தப் பாவப் பகிர்தலை இந்துவான சாஸ்திரிகளும் ஜோதிடர்களும வெகு காலமாகப் அநுஷ்டித்துக் கொண்டு வருகின்றார்கள். ஆகையால் இந்தப் பாவப் பகிர்தல் புராதீனமானது சாஸ்திர சம்மதமுள்ளது. இந்தப்பாவப் பகிர்தல் பிரகாரம் இந்து பாவச் சக்கிரம் போடும் வழியை இப் புத்தகத்தில் உதாரணத்துடன் விளக்கிக்காட்டியிருக்கிறது மேல்நாட்டு ஜோதிடத்திலோ அநேகவிதமான பாவப் பகிர்தல்கள் (Several Methods of House Division) இருக்கின்றன. இந்தப பல பாவப் பகிாதலகள ஒவ்வொன்று அஸ்திவாரத்

---

* இந்தப் புத்தகம் இங்கிலீஷிலும் அச்சிடப்பட்டிருக்கிறது, இதற்கு இங்கிலீஷில் சி. ஜி. ராஜனஸ் அஸ்ட்ரலாஜிகல் டேபில்ஸ் ஆப் லக்ன அண்டு அதர் அவுஷஸ் (C. G. Rajan's Astrological Tables of Lagna and other Houses or Bhavas என்று பெயர்.

லேயே முரண்பட்டுக்கொண்டு வித்தியாசப் பட்டிருப்பதால் ந்தப் பலவித பாவப் பகிர்தல்களின் அஸ்திவாரத்தை அநுசரி ந்துமேல் நாட்டு ஜோதிடத்திற்காகத் தயார் செய்யப்பட்ட லக்கின புட பாவஸ்புட வாக்கியங்கள் (அதாவது Tables of Houses) டங்கிய புத்தகங்கள் அநேகம் ஒன்றுக்கொன்று அதிக வித்தி சத்துடன் தற்காலத்தில் கிடைக்கக்கூடியனவாக விருக்கின் ன. இந்தப் பலவிதமான பாவப் பகிர்தல்களின் முறையில் இந்து சத்து ஜோதிடத்தினுடைய பாவப்பகிர்தல் கூட ஒன்று ஆகும். கையால் இந்தப் புததகம் இந்து ஜோதிட சாஸ்திரத்தைக் கையாளுபவர்களுக்கு மாத்திரமல்லாமல் மேல்நாட்டு ஜோதிட ஸ்திரத்தைக் கையாண்டுவருகிற ஒரு சார்பாருக்கும் மிகவும் யோசனமானது. மேலும் உதைய லக்கினம் மாத்திரம் பாவப் ர்தலில் மேல் நாட்டுப் பல வழிகளில் ஒற்றுமையாக வருதலால் ல் நாட்டு ஜோதிடத்தைக் கையாளும் எல்லோரும் உதைய க்கினத்தைக் கணிக்க இப்புத்தகத்தை உபயோகப்படுத்தலாம்.

இப் புத்தகத்தை வாசிப்பதில் முதலில் அயிட்டம் நெம்பர் 1 தல் அயிட்டம் நெம்பர் 13 முடியவும், பிறகு அயிட்டம் ம்பர் 15 முதல் அயிட்டம் நெம்பர் 20 முடியவும், பிறகு அயிட் ம் நெம்பர் 14யையும், பிறகு அயிட்டம் நெம்பர் 21 முதல் அயிட் ம் நெம்பர் 24 முடியவும் வாசிக்கவும். அதாவது கோரிய வேளை கு நட்சத்திர ஹோரா மணியைக் கணிக்கும் வழியைத்தெரிந்து காண்டு நட்சதத்திர ஹோரா மணியைக் கணித்துக்கொண்டு றகு இந்த நட்சத்திர ஹோரா மணியின் உதவியால் உதைய க்கின ஸ்புடமும் தசம லக்கின ஸ்புடமும் கணிக்கவேண்டும்.

இந்தப் புத்தகத்திலுள்ள கணித முறை பிரகாரம் கணிதஞ் சய்வது முதலில் கஷ்டமாகத் தோற்றினும் தோற்றும். கணி த்தின் கஷ்டத்தை நிவர்த்திக்கும் பொருட்டு இதில் அநேக தனங்களும் உதாரணங்களும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. “சித்திரமும் கைப் பழக்கம், செந்தமிழும் நாப் பழக்கம், வைத்த தாரு கல்வி மனப் பழக்கம்” என்றது போலவே கணிதமும் ணித்துக் கணித்துப் பார்க்கவே பழகிவிடும் என்று எண்ணி ந்த நவீன மார்க்கத்தைக் கையாண்டு அதனால் ஜோதிடர்கள் யனடைவார்களாக. இந்தப் புத்தகத்தில் எழுத்துப் பிழை சொற் பிழை முதலியவைகளிருந்தால் அவைகளை மன்னித்து இதிலுள்ள ராம்சத்தையும் மார்க்கத்தையும் ஏற்றுக்கொண்டு இந்தப் புத்த த்தை ஆமோதிக்கும்படியாய் இதை வாசிக்கும் பெரியோர்களை ம், சிறியோர்களையும் வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளப்படு றது. மேலும் இந்தப் புத்தகத்தை இன்னும் விருத்தி செய்வதற் கு யாராகிலும் தெரியப்படுத்தும் அபிப்பிராயங்களை வந்தனத் டன் அங்கீகாரஞ் செய்யப்படும்.

சி. ஜி. ராஜன்

# விஷய அட்டவணை

குறிப்பு :— விஷய அட்டவணை நிமித்தமாக இந்தப் புத்தகத்தின் முன் பாகமாகிய போதனை விஷயங்களும் வழிகளும் அடங்கிய பாகத்திற்கு எ பாகம் என்றும், வாக்கியங்கள் அடங்கிய பாகத்திற்குப் பி பாகம் என்றும் பாவித்துக் கொள்ளவும்.

எ-பாகம் போதனை விஷயங்களும் வழிகளும் உதாரணங்களும்

P.S. மணிமெத்துபாகவதர்.

உ

கடவுள் துணை.

# ஜாதக லக்கின ஸ்புட பாவஸ்புட கணனம்

## செக்ஷன் நெ. 1.

அயிட்டம் நெ. 1 :—இந்தப் புத்தகத்தில் தற்கால நவீன வழி பிரகாரம் நக்ஷத்திர ஹோராமணியைக் கொண்டு லக்கின ஸ்புடமும் பாவச் சக்கிரமும் சுலபமாய்க் கணிக்கும் மார்க்கம் சொல்லப்படும். ஜோதிடத்தில் உதய லக்கினமும், பாவச்சக்கிரமும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த உதய லக்கினத்தைக் கொண்டும் பாவச் சக்கிரத்தை அனுசரித்தும் பூர்வீகமாயும், பிரமாணமாயும் முக்கியமாயுமுள்ள ஜோதிட கிரந்தங்களில் ஜாதகப் பலாபலன்கள், பிரஸ்ன பலாபலன்கள் முதலியவை சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் ஜெனன ஜாதகப் பலாபலன்களிலும், பிரஸ்ன பலாபலன்களிலும், முகூர்த்தங்கள் நிர்ணயிப்பதிலும் உதைய லக்கினம் மிகவும் அவசியகரமான அம்சமாக விருக்கிறது. மேலும் பூர்வீக கிர்ந்தங்கள் பிரகாரம் பலாபலன்கள் சொல்ல வேண்டுமானால் பாவச் சக்கிரம் போட்டு அந்தப் பாவச் சக்கிரத்தில் கிரகங்கள் இருக்கும் நிலையைக் கொண்டே பலாபலன்கள் சொல்ல வேண்டுமே ஒழிய இராசிச் சக்கிரத்தில் கிரகங்கள் இருக்கும் நிலையைக் கொண்டு பலாபலன்கள் சொல்லுவது மிகவும் தோராயமானதாகும். இராசிச் சக்கிரத்தில் ஒவ்வொரு ராசியும் முப்பது பாகை அளவுள்ளது. பாவச் சக்கிரத்தில் ஒவ்வொரு பாவமும் முப்பது பாகை அளவு இல்லாமல் வித்தியாசப் பட்டிருக்கிறது; அதாவது பாவம் முப்பது பாகைக்குமேற்பட்டும் குறைந்தும் இருக்கிறது. வடக்கே அல்லது தெற்கே செல்லச் செல்லப் பாவச் சக்கிரத்தில் பாவங்கள் அளவில் முப்பது பாகைக்கு மேல் மிகவும் அதிகப்பட்டும் முப்பது பாகைக்குள்ளே மிகவும் குறைந்தும் சம்பவிக்கின்றன. இராசிச் சக்கிரத்தில் புதன் சூரியனை

விட்டு இரண்டு ராசிக்கு மேற்பட்டிருக்க முடியாது, இவ்விதமாகவே இராசிச் சக்கிரத்தில் சுக்கிரனும் சூரியனைவிட்டு மூன்று இராசிக்கு மேற்பட்டு இருக்க முடியாது. இப்படியிருக்க ஜோதிடத்தில் மிகவும் நிபுணரான வராஹமிகிராச்சாரியார் தன்னுடைய ஜோதிட சாஸ்திரமாகிய பிருஹத் ஜாதகத்தில் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் ஆறுவது சுலோகத்தில் சூரியனுக்குக் கேந்திரத்தில் புதனும் சுக்கிரனும் இருந்தால் பலான் பலன் என்று சொல்லி இருக்கின்றார். இவ்விதமாகக் கேந்திரம் நேரிடுவதற்குச் சூரியனை விட்டுப் புதனும் சுக்கிரனும் மூன்று ராசிக்குமேற்பட்டிருக்க வேண்டும். ஆனால் மேற் சொல்லிய பிரகாரம் புதன் சூரியனை விட்டு இரண்டு ராசிக்கு மேற்பட்டிருக்க முடியாது, அப்படியே சுக்கிரனும் சூரியனைவிட்டு மூன்று ராசிக்குமேற்பட்டிருக்க முடியாது. ஆகையால் இவ்விதமான கேந்திர சம்பவம் இராசிச் சக்கிர ரீதியாய் நேரிடமுடியாமலிருக்க எவ்விதமாய் வராஹமிகிராச்சாரியார் மேற் சொல்லிய விதமாகக் கேந்திர யோகப் பலாபலன்கள் சொல்லி இருக்கக் கூடும் என்றும் அவர் சொல்லியது பிசகு என்றும் சிலர் அப்பிராயப் படுகிறார்கள். ஆனால் பாவச் சக்கிர ரீதியாய் பாவங்கள் சில சமயம் அளவில் மிகவும் குறைந்து சிறியதாய்ப் போய் விடுவதால் பாவச்சக்கிர ரீதியாய்ப் புதனும் சுக்கிரனும் சூரியனுக்குக் கேந்திரத்தில் இருக்க நேரிடக் கூடுமாகையால் வராஹமிகிராச்சாரியார் சொன்னது பிசகு அல்ல, சரியானதே என்று தீர்மானஞ் செய்வது மன்றி பிருஹத் ஜாதகத்தையும் மற்றக் கிரந்தங்களைப் போலவே பாவச் சக்கிர ரீதியாய்ப் பலாபலன்கள் சொல்ல உபயோகப்படுத்த வேண்டும் என்று அபிப்பிராயப் படுகின்றார்கள்.

அயிட்டம் நெ. 2 :—(a) மேலும் முன்னமே சொல்லிய பிரகாரம் லக்கின ஸ்புடத்தையும் பாவச் சக்கிரத்தையும் வான சாஸ்திர சம்மந்தமான ஒருவிதமான காலமாகிய நக்ஷத்திர ஹோரா மணி நிமிஷத்தினுதவியாலும் இந்த நக்ஷத்திர ஹோரா மணி நிமிஷ சம்மந்தமாய் ஏற்படுத்தப்பட்ட ஒரு பிரத்தியேகமான வாக்கியத்தினுதவியாலும் துல்லியமாகவும் சுலபமாகவும் நிர்ணயஞ் செய்யலாம்.

அயிட்டம் நெ. 2 :— (b) லக்கினமும் பாவச் சக்கிரமும் "புவனச் சக்கிரம்" (Ecliptic) என்பதில் இருக்கின்றன. புவனச்

சக்கிரம் என்றால் என்ன என்பதைக் கவனிப்போம். நாம் ஆகாயத்தைப் பார்க்குமளவில் ஆகாயம் ஒரு பெரிய காலி யான பிரமாண்டமான கோள ரூபமான ஓடாகவும் (Spherical Shell or Celestial Sphere) அந்தக் காலி கோளத் தின் உள்ளே நாம் அதன் மத்தியிலிருப்பதாகவும் நமக்குத்தோற்று கிறது. இந்தக் கோளத்தின் உள்ளே கிரகங்களும் நக்ஷத்திரங் களும் இதர அண்டங்களும் இருப்பதாகத் தோற்றுகின்றன. நமது கண்களுக்குச் சூரியன் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் இருக் கும் மார்க்கமாக ஒரு வட்டம் வழியாகச் செல்லுவதாகத் தோன் றுகிறது. மேலும் இந்த வட்டமும் மேற் சொல்லிய பிரமாண்ட மான கோளத்தின் (Celestial Sphere) நமக்குத் தெரியும்படி யான உள் பாகத்தில் இருப்பதாகத் தோற்றுகிறது. இந்த வட்டத் திற்குத்தான் பவனச்சக்கிரம் (Ecliptic) என்று பெயர். பூமி பெரும்பாலும் ஒரு பந்து போன்ற உருண்டை வடிவமானகோளம் என்றும், பூமிதன்னுடைய இருசியைக்கொண்டு சுற்றிக்கொண்டே இருக்கிறதென்றும் நாம் அறிந்திருக்கிறோம். இந்த இருசியைமேற் சொல்லிய பிரமாண்ட கோளத்தில் படும்படியாக இரண்டு பக்கத் திலும் நீட்டினால் இருசியின் இரண்டு முனைகளும் மேற் சொல்லிய பிரமாண்ட கோளத்தில் படும் இடத்திற்குப் பிரம்மாண்டத் துரு வங்கள் என்றும். வடக்கேயுள்ள துருவத்திற்குப் பிரம்மாண்ட வட துருவம் (Celestial North Pole) என்றும் தெற்கேயுள்ள துரு வத்திற்குப் பிரம்மாண்ட தென் துருவம் (Celestial South Pole) என்றும் சொல்லுவோம். இந்தப் பிரம்மாண்ட கோளத்தின் இருசிக்குப்பிரமாண்ட இருசி என்று சொல்லுவோம். பிரம்மாண்ட வட துருவத்தையும் பிரம்மாண்ட தென் துருவத்தையும் தொடும் படியான பிரம்மாண்ட இருசியின் நடு மத்தி வழியாகவும் இந்தப் பிரம்மாண்ட இருசிக்கு (க் கொஞ்சமேனும் வடக்குப் பக்கமாவது தெற்குப் பக்கமாவது சாய்வில்லாமல்) நேராக அதாவது இந்த இருசியுடன் நேர்கோணம் [அதாவது லம்பம் = Perpendicular] உண்டாக்கும்படியாகச் செல்லுகின்ற பிரம்மாண்ட வட்டத்தை (Celestial Great Circle) எடுத்துக் கொள்வோம். இந்தப் பிரம் மாண்ட வட்டத்திற்குப் பிரம்மாண்ட நிரட்ச ரேகை அல்லது புவன மத்திய ரேகை (Celestial Equator) என்று சொல்லுவோம். நமது பூகோள சாஸ்திரங்களில் சொல்லி இருக்கும் நிரட்ச ரேகை (Terrestrial Equator or Geographical Equator) க்குச் சாதா

ரண நிரட்ச ரேகை அல்லது பூமத்திய ரேகை என்று பெயர். இ
தச் சாதாரண நிரட்ச ரேகையைப் பிரம்மாண்ட கோளத்தின் உள்
பாகத்தில் போய்ப் படும்படியாக மேலும் கீழும் நாட்டினுல் பிரம்
மாண்ட கோளத்தின் உள்பாகத்தில் ஏற்படும்படியான இந்தப்
பிரம்மாண்ட வட்டத்திற்குத்தான் பிரம்மாண்ட நிரட்ச ரேகை
என்று பெயர். பவனச் சக்கிரமும் புவன மத்திய ரேகையும்
ஒன்றை மற்றொன்று இரண்டு விடத்தில் சந்திக்கின்றன. இந்த
இரண்டு விடங்களில் ஒன்றுக்கு மேஷாயனம் என்றும் மற்றொன்
றிற்கு துலாயனம் என்றும் பெயா, இவ்விரண்டு இடங்களில்
சூரியன் புவன மத்திய ரேகையின் தெற்கிலிருந்து அதற்கு வடக்
கில் செல்லும்போது எந்த விடத்தின் மூலமாய்ச் செல்லுகின்
றதோ அந்த விடத்திற்குத்தான் மேஷாயனம் என்றும், மற்றொரு
விடத்திற்குத் துலாயனம் என்றும் பெயர். பூமி தன்னைத்தானே
சுற்றிக் கொண்டே விருப்பதால் எல்லா அண்டங்களைப் போலவே
இந்த மேஷாயனமும் கிழக்கிலிருந்து மேற்குப் பக்கமாகச் சுற்றிக்
கொண்டேயிருப்பதாகத் தோறுகிறது. பிரம்மாண்ட வட துரு
வம், நமது உச்சி (Zenith = உன்னதம்) பிரம்மாண்ட தென் துரு
வம், பாதாளம் (Nadir = நதம்) இவைகளின் வழியாகச் செல்லும
பிரம்மாண்ட வட்டத்திற்குப் பிரம்மாண்ட உச்ச ரேகை (Meridian)
என்று சொல்லுவோம். மேற்சொல்லிய பிரகாரம் மேஷாயனம
சுற்றிக் கொண்டேவிருப்பதில் மேஷாயனம் இந்தப் பிரமமாண்ட
உச்சி ரேகைக்கு அடிக்கடி வந்து கொண்டு விருக்கின்றது. இவ்
விதமாக மேஷாயனம் சதா சுழண்டு கொண்டே விருப்பதில் பூமி
யில் ஒரு விடத்திலிருந்து பாக்கும்போது மேஷாயனம் ஒரு
தடவை ஆகாயத்தில நமது தலைக்குமேல் பிரம்மாண்ட உச்சி
ரேகைக்கு வந்தது முதல் உடனே அடுத்து மறுபடியும் பூமியில்
அதே விடத்திலிருந்து பார்க்கும்போது ஆகாயத்தில் நமது
தலைக்கு மேல் பிரம்மாண்ட உச்சி ரேகைக்கு வரும் வரையிலு
முள்ள காலத்திற்குத்தான் நக்ஷத்திர ஹோராதினம் என்றுபெயர்.
இந்த நக்ஷத்திர ஹோராதினம் நமது சாதாரணக் கடியாரக் கணக்
கில் 23 மணி-56 நிமிஷம்-04 09, சக்கண்டு ஆகும். இந்த நக்ஷத்திர
ஹோரா தினந்தான் பூமி தன்னைத்தானே ஒரு தரம் சுற்றி வருவ
தற்குச் செல்லுகிற காலம் ஆகும். இந்த நக்ஷத்திர ஹோரா தினக்
காலத்தை இருபத்திநான்கு சமபாகமாகப் பங்கிட வருகின்ற ஒவ்
வொரு பாகத்திற்கு நக்ஷத்திர ஹோரா மணி என்று பெயர். ஒரு

நக்ஷத்திர ஹோராமணியை அறுபது சம பாகமாகப் பங்கிடவரும் ஒவ்வொரு பாகததிற்கும் நக்ஷத்திர ஹோரா விமிஷம் என்று பெயர். ஒரு நக்ஷத்திர ஹோரா விமிஷத்தை அறுபது சமபாகமா கப்பங்கிட வரும ஒவ்வொரு பாகத்திற்கும் நக்ஷத்திர ஹோரா சக்கண்டு என்று பெயர். மேஷாயனம சம்மந்தமான தினம் மணி, விமிஷம், சக்கண்டு இவைகளுக்கு நக்ஷத்திர ஹோரா தினம், நக்ஷத்திர ஹோரா மணி, நக்ஷத்திர ஹோரா விமிஷம், நக்ஷத்திர ஹோரா சக்கண்டு என்று பெயர், நக்ஷத்திர ஹோரா மணி நக்ஷத்திர ஹோரா விமிஷம் இவைகளைக் காட்டும் ஒரு ஸ்பெஷல் கடியாரம் வான சாஸ்திர உபயோகத்திற்காக நக்ஷத்திர ஆபீசுகளில் இருக்கின்றது. இந்த ஸ்பெஷல் கெடியா ரத்தறுகு நக்ஷத்திர கெடியாரம். (Siderial Clock) என்று பெயர். இந்த நக்ஷத்திரக் கெடியாரத்தை நாம் உலக வழக்குக் காரியங் களுக்கு உபயோகப் படுத்துவதில்லை. நாம் உலக வழக்குக் காரி யங்களுககு உபயோகப் படுத்தும் கெடியாரத்திற்கு மீன் ஸன் கெடியாரம (Mean Sun Clock) அல்லது சாதாரண கெடியாரம என்று பெயர். நக்ஷத்திர கெடியாரம், சாதாரண கெடியாரம் என்று விபரமாகச் சொல்லாமல் கெடியாரம் என்று சொன்னு லும் நாம் உலக வழக்குக்கு உபயோகப்படுத்தி வருகின்ற கெடியா ரம என்றே இந்தப் புத்தகம் முழுவதிலும் பாவித்துக்கொள்ளவும.

நமது சாதாரண கெடியாரக் கணக்குப்படி வரும் 23 மணி 56 விஷம் 04.091 சக்கண்டு என்பது நக்ஷத்திர ஹோரா மணி கணககில் 24 மணி-0 விமிஷம-0 சக்கண்டு ஆகும். சாதாரணகெடி யாரக் காலத்தைக் கெ. கா என்ற குறிப்பெழுததாலும், நக்ஷத்திர ஹோராதிகாலததை ந. கா என்ற குறிப் பெழுத்தாலும் இப் புத்தகம் முழுவதும் இனி தெரிவிக்கப்படும். மேலும் நக்ஷத்திர ஹோராதி காலததிற்கும் மேஷாயனம என்றதற்கும் ஒருவித சமமந்தம் உண்டு என்று நாம முன்னமே சொல்லியதிலிருந்து ஏற்படும். மேஷாயனம் பவனச் சக்கிரத்திலிருப்பதால் பவனச் சக்கிரததிற்கும நக்ஷத்திர ஹோரா காலத்திற்கும் ஒருவிதயான சம்மந்தம உண்டு என்று ஏற்படுகிறது. லக்கினமும பன்னி ரண்டு ராசிகளும், பன்னிரண்டு பாவங்களும் பவனச் சக்கிரத்தில் இருப்பதால் நக்ஷததிர ஹோரா காலத்திற்கும் லக்கினத்திற்கும், பன்னிரண்டு ராசிகளுக்கும், பன்னிரண்டு பாவங்களுக்கும்

ஒருவிதமான சம்மந்தம் உண்டு என்று ஏற்படுகின்றது. ஆகையா ஒரு குறித்த காலத்திற்கு நக்ஷத்திர ஹோரா மணி நிமிஷ தெரிந்தால் அக்காலத்திற்கு நக்ஷத்திர ஹோரா காலத்தை அ சரித்து ஏற்படுத்தப்பட்டிருக்கும் (நமது 9-வது வாக்கியத்தை போன்ற) பிரத்தியேகமான வாக்கியங்களினுதவியால் லக்கி ஸ்புடமும் பாவச் சக்கிரமும் துல்லிபமாக நிர்ணயிக்க முடியும்.

அயிட்டம் நெ. 2 (b) யைப் படித்துத் தெரிந்து கொள் இஷ்டமில்லாதவர்கள் இந்த அயிட்டத்தைப் படிக்காமலும் தெரிந்து கொள்ளாமலும் விட்டு விடலாம், அதனுல் யாதொரு பாதகமுமில்லை.

அயிட்டம் நெ. 3 :—லக்கின ஸ்புடத்தைக் கணிக்க அநே வழிகள் இருக்கின்றன. அவைகளில் மேஷம் $4\frac{1}{4}$ நாழிகை, ரிஷ பம் $4\frac{3}{4}$ நாழிகை. மிதுனம் $5\frac{1}{4}$ நாழிகை, கடகம $5\frac{1}{2}$ நாழிகை.... கும்பம் $4\frac{3}{4}$ நாழிகை, மீனம் $4\frac{1}{4}$ நாழிகை என்ற இராசிமானச் சங்கியைக் கொண்டு சிலர் எல்லாவிடங்களுக்கும் லக்கினம் கணித்து வருவது மிகவும் தோராயமான கணிதம் இவ்விதமா லக்கினத்தைக் கணிப்பது பெரும்பாலும் லக்கினம் பிசகாகவே இருக்கும். சிலர் ஒவ்வொரு விடத்திற்கும் பிரத்தியேகமா அக்ஷாம்சத்தை அனுசரித்துக் கொடுக்கப்பட்டுள்ள இராசிமானச் சங்கியைக்கொண்டு லக்கினம் கணித்து வருகின்றார்கள். இக்கணி தங்கூடக் கொஞ்சம் தோராயமானது; லக்கினச்சந்தி என்ற சந் தேகம் நேரிடும்போது இக்கணித மார்க்கத்தால் அந்த லக்கின சந்திச் சந்தேகத்தை நிவர்த்தி செய்ய சாத்தியப்படாது. நக்ஷத்திர ஹோராதிக் காலத்தை அனுசரித்துக் கணிக்கும் லக்கின ஸ்புடம் மேற்சொல்லிய பிரகாரம் கணிக்கும் லக்கின ஸ்புடங்களை விட மிகவும் துல்லிபமானதால் லக்கின சந்தி முதலிய சந்தேகங்களை நக்ஷத்திர ஹோராதி காலத்தினுதவியால் கணிக்கும் வழியால் நிவர்த்திசெய்து கொள்ளலாம். ஆகையால் லக்கின ஸ்புடத்தை யும் பாவச் சக்கிரத்தையும் துல்லிபமாக நிர்ணயிக்கத் தற்காலத் தில் ஆங்கில பாஷை தெரிந்த அநேகர் நக்ஷத்திர ஹோராதி கால வழியை அனுசரித்து வருகின்றார்கள். நமது தமிழ் நாட்டாரும் தமிழ் மாத்திரம் தெரிந்தவர்களும் இந்த நக்ஷத்திர ஹோரா கால வழியை அனுஷ்டிக்கும் பொருட்டே ஆங்கிலத்தில் மாத்திர மன்றித் தமிழில்கூட இந்தப் புத்தகத்தை எழுதத் துணிந்தேன்

அயிட்டம் நெ. 4:—இந்தப் புத்தகத்தை உபயோகப்படுத்தும் விஷயமாகச் சில கால அளவுகளைத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. தற்காலத்தில் பற்பல கால அளவுகள் என்ற டயம்கள் (Several Kinds of Time) இருக்கின்றன. அவைகள் (1) அப்பேரெண்ட் டயம் (Apparent Time) (2) மீன் சோலர் டயம் என்ற மீன் டயம் (Mean Solar Time or simply Mean Time) (3) ஸ்டாண்டர்டு டயம் (Standard Time) (4) நக்ஷத்திர ஹோரா டயம் (Siderial Time) முதலியன ஆகும். நக்ஷத்திர ஹோரா டயம் என்பது நாம் முந்தி சொல்லியிருக்கிற நக்ஷசத்திர ஹோரா தினத்தை இருபத்திநான்கு சம பாகமாகப் பங்கிட வருகின்ற மணியே ஆகும். பூமியில் ஒருவிடத்திலிருந்து பார்க்கும்போது நமது கண்களுக்குப் புலப்படுகின்ற சூரியன் (—இந்தச் சூரியனை நிஜ சூரியன் என்று சொல்லுவோம்.) ஒரு தடவை ஆகாயத்தில் நமது தலைக்குமேல் பிரம்மாண்ட உச்சி ரேகைக்கு வந்தது முதல் உடனே அடுத்து மறுபடியும் (பூமியில் அதே விடத்திலிருந்து பார்க்கும்போது) ஆகாயத்தில் நமது தலைக்குமேல் பிரம்மாண்ட உச்சி ரேகைக்கு வரும் வரையிலுமுள்ள காலத்திற்கு அப்பேரெண்ட்டு தினம் (Apparent Solar Day) என்று பெயர். இந்த அப்பேரெண்ட்டு தினத்தை இருபத்து நான்கு சமபாகமாகப் பங்கிடவருவது அப்பேரெண்ட்டு டயம் ஆகும். நிஜ சூரியன் சதா காலமும் வித்தியாசமில்லாமல் ஒரே சமானமான ஓட்டத்துடன் (Uniform Motion) செல்லாமல் வித்தியாசமான ஓட்டத்துடன் (Non-uniform Motion) செல்லுவதால் இந்த வித்தியாசமுள்ள அப்பேரெண்ட்டு டயத்தைக் கொண்டு கெடிகாரங்கள் செய்து நமது உலகவழக்குக்கு உபயோகப்படுத்துவது கஷ்டமாய் இருக்கும் என்றக்காரணத்தினாலே நமது உலக வழக்குக் கெடியாரத்தினுதவியினால் அப்பேரெண்ட்டு டயத்தை உபயோகப் படுத்துவதில்லை. ஆகையால் இந்த அப்பேரெண்ட்டு டயத்தைப்பற்றி நாம் இனி கவனிக்க வேண்டிய அவசியமில்லை. எப்போதும் வித்தியாசமில்லாமல் ஒரே சமானமான ஒரு குறித்த ஓட்டத்துடன் செல்லுகின்ற ஒரு சூரியன் கணித முறைக்காக மனக்கற்பிதத்தில் இருப்பதாக நாம் பாவித்துக் கொள்வோம், இந்தச் சூரியனுக்கு "அரூப சூரியன்" (Fictitious Mean Sun) என்று பெயரிடுவோம். பூமியில் ஒரு விடத்திலிருந்து பார்க்கும்போது (நமது கண்களுக்குப் புலப்

படாமலிருக்கின்ற அதாவது மனக்கற்பிதமான அதாவது போலி யான) அரூப சூரியன் ஒரு தடவை ஆகாயத்தில் நமது தலைக்கு மேல் பிரம்மாண்ட உச்சி ரேகைக்கு வந்தது முதல் உடனே அடுத்து மறுபடியும் (பூமியில் அதே விடத்திலிருந்து பார்க்கும் போது) ஆகாயத்தில் நமது தலைக்குமேல் பிரம்மாண்ட உச்சி ரேகைக்கு வரும் வரையிலுமுள்ள காலத்திற்கு மீன் சோலர் தினம் (Mean Solar Day) என்று பெயர்; இந்த மீன் சோலர் தினத்தை இருபத்து நான்கு சமபாகமாகச் செய்ய மீன் சோலர் டயம் (Mean Solar Time) என்ற மீன் டயம் ( Mean Time ) ஏற்படும். பூமியில் ஒரு விடத்திலிருந்து பார்க்கும்போது ஏற்படுகின்ற மீன் டயத்திற்கு அந்த விடத்திற்குறிய மீன் டயம் அல்லது அந்த இடத் திற்குறிய சுதேச மீன் டயம் (Local Mean Time) என்று பெயர் இந்தச் சுதேச மீன் டயத்திற்குத்தான் சுதேச கெடியார மணி அல் லது சுதேச மணி (Local Time) என்று சொல்லுவதுண்டு. பூமி யில் அநேக இடங்கள் இருப்பதால் அந்தந்த விடத்திற்கு ஒரு சுதேச மீன் டயம் என்ற சுதேச கெடியாரமணி ஏற்படும். ஒவ் வொரு விடத்திற்கும் ஒவ்வொரு மீன் டயத்தை வைத்துக் கொண்டு உலக வழக்குக் காரியங்களை நடத்துவது மிகவும் கஷ்ட மாயிருக்கும். வான சாஸ்திர கணிதத்தில் கிரீன்விச்சு (Greenwich) என்ற பட்டணத்திற்குறிய கிரீன்விச்சு மீன் டயத்தை பெரும்பாலும் உலகம் முழுவதும் உபயோகப்படுத்தி வருகின்றார் கள். உலக வழக்குக் காரியங்களை நடத்துவதில் ஒவ்வொரு தேசத்திற்கும் அல்லது ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு மீன் டயத்தை இராஜாங்க மூலமாக ஏற்படுத்திக்கொண்டு அந்த மீன் டயத்தை அந்தந்த தேசம் முழுவதிலும் அல்லது அந்தந்த மாகா ணம் முழுவதிலும் உபயோகப்படுத்தியும் உபயோகப் படுத்திக் கொண்டும் இருக்கின்றார்கள் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஆறு வது வருஷம் ஜனவரி மாதம் ஒராந் தேதி (1-1-1906 A.D.) பகல் பன்னிரண்டு மணிக்கு முந்தியுள்ள காலங்களில் சென்னை மாகா ணத்தில் பெரும்பாலும் எல்லா பெரிய விடங்களிலும் ரயில்வே ஸ்டேஷன்களிலும் சென்னை பட்டணத்திற்குறிய சென்னை மீன் டயம் அல்லது மதராஸ் மீன் டயம் (Madras Mean Time) என்ற

டயத்தை உபயோகப் படுத்திக்கொண்டு வந்திருக்கின்றார்கள். * இந்தச் சென்னை மீன் டயத்திற்கும் கிரீன்விச்சி மீன் டயத்திற்கும் 5 மணி-20 நிமிஷம்-59 சக்கண்டு அல்லது 5 மணி-21 நிமிஷம் வித்தியாசமுண்டு; அதாவது சென்னை மீன் டயம் என்பது கிரீன் விச்சு மீன் டயத்தை விட 5 மணி-21 நிமிஷம் (ஐந்துமணி இருபத்தொன்று நிமிஷம்) அதிகப்பட்டது. ஒரு தேசத்திலோ அல்லது ஒரு மாகாணத்திலோ உபயோகப்படுத்திவரும் மீன் டயத்திற்கும் கிரீன்விச்சு மீன் டயத்திற்கும் உள்ள வித்தியாசத்தை அந்தத் தேசத்து அல்லது அந்த மாகாணத்து மீன் டயம் வித்தியாசம் என்று சொல்லுவோம். அனுபந்தம். நெ. 1 யைப் பார்க்கவும். 1-1-1906 பகல் பன்னிரண்டு மணிக்குப் பிந்தி நாளது வரையிலும் இந்தியாவில் கல்கத்தா, போர்ச்சுகிஸ் இந்தியா இவ்விடங்கள் தவிர மற்றெல்லா விடங்களிலும், இலங்கைத் தீவில் (Ceylon) எல்லா விடங்களிலும், இந்தியா ஸ்டாண்டர்டு டயம் அல்லது மதராஸ் ஸ்டாண்டர்டு டயம் என்ற ஒரு ஸ்டாண்டர்டு டயத்தை உபயோகப்படுத்தி வருகிறார்கள். இந்த இந்தியா ஸ்டாண்டர்டு டயம் என்பது கிரீன்விச்சு மீன் டயத்தைவிட 5 மணி-30 நிமிஷம் (ஐந்து மணி, முப்பது நிமிஷம்) அதிகமானது. 1/-1-1906 பகல் 12 மணிக்குப் பிறகு கல்கத்தாவிலும் போர்ச்சுகிஸ் இந்தியாவிலும் மீன் டயம், இந்தியா ஸ்டாண்டர்டு டயம் என்ற இவ்விரண்டு விதமான டயங்களில் இரண்டையும் அல்லது ஒன்றையும் உபயோகப் படுத்திக்கொண்டு வருகின்றார்கள். ஆகையால் நாம் லக்கின ஸ்புடம் கணிக்க நமக்குக் கிடைத்திருக்கும் மணி அந்தந்த மாகாணத்து மீன் டயமா அல்லது லக்கினம் கணிக்க வேண்டிய விடத்

* குறிப்பு:—சில விடங்களில் போஸ்டாபீசுகளில் சுதேச கெடியாரமணியை உபயோகப் படுத்தியிருக்கின்றார்கள். 1-1-1906க்கு முன் நமக்கு லக்கினம் கணிக்கக் கிடைக்கும் டயம் சென்னை மீன் டயமா அல்லது சுதேச கெடியார மணியா என்று தெரிந்து கொள்ள முகாந்தரமில்லாவிட்டால் ரயில்வே ஸ்டேஷன்கள் உள்ள ஊர்களிலும் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள ஊர்களிலும் சென்னை மீன் டயம் உபயோகப் படுத்தப்பட்டிருக்கும் என்றும் ரயில்வே ஸ்டேஷனுக்குத் தூரத்திலுள்ள கிராமங்களில் சுதேச கெடியார மணி உபயோகப்படுத்தப் பட்டிருக்கும் என்றும் பாவித்துக் கொள்ளவும்.

தின் சுதேச மணியா அல்லது இந்தியா ஸ்டாண்டார்டு டயம் என்று நாம் முதலில் தெரிந்து கொள்வது மிகவும் அவஸ்யமானது. லக்கினத்தை நிர்ணயிக்க ஒருவர் நமக்குத் தெரிவிக்கும் மணி அந்த மாகாணத்து மீன் டயம் மணியா அல்லது லக்கினம் கணிக்க வேண்டிய விடத்தின் சுதேச மணியா அல்லது இந்தியா ஸ்டாண்டார்டு டயம் மணியா என்று நமக்குத் தெரியாவிட்டால் அவரைக் கேட்டு எவ்விதமான டயம் என்று தெரிந்து கொள்வது மிகவும் அவசியமானது. ஒரு தேசத்திலோ அல்லது ஒரு மாகாணத்திலோ உபயோகப் படுத்தி வரும் ஸ்டாண்டார்டு டயத்திற்கும் கிரீன்விச்சு மீன் டயத்திற்கும் உள்ள வித்தியாசத்தை அந்தத் தேசத்து அல்லது அந்த மாகாணத்து ஸ்டாண்டர்டு டயம் வித்தியாசம் என்று சொல்லுவோம். ஸ்டாண்டர்டு டயத்தை அந்தந்த தேச சௌகரியத்தை அனுசரித்து அடிக்கடி மாற்றிக் கொண்டே யிருப்பதால் லக்கினம் கணிக்க வேண்டிய காலத்தில் அந்தந்த தேசத்து ஸ்டாண்டர்டு டயத்திற்கும் கிரீன்விச்சுமீன்டயத்திற்கும் உள்ள ஸ்டாண்டர்டு டயம் வித்தியாசத்தை எவ்விதத்திலாகிலும் தெரிந்து கொள்வது அவசியம். நமக்குத் தேவையான சில முக்கியமான தேசங்களுக்கும் பட்டணங்களுக்கும் அந்தந்த தேசங்களின் அல்லது பட்டணங்களின் ஸ்டாண்டர்டு டயத்திற்கும் கிரீன்விச்சு மீன் டயத்திற்கும் உள்ள ஸ்டாண்டர்டு டயம் வித்தியசத்தை ஆறுவது வாக்கியத்தில் கெடியார மணி வித்தியாசம் என்ற கலத்தில் கொடுத்திருக்கிறது. இந்த ஸ்டாண்டர்டு டயம் வித்தியாசங்கள் மாறுமல் இருக்கின்றனவா என்று இந்தப் புத்தகத்தை உபயோகப் படுத்துகின்றவர்கள் அப்போதுக்கப்போது விசாரணை செய்து கொண்டேயிருக்க வேண்டியது அவசியம். இந்தியாவிலும் சிலோனிலும் ஸ்டாண்டர்டு டயம் (அதாவது ஸ்டாண்டர்டு மணி) 1-1-1906 பகல் 12 மணி முதல் நாளது வரையிலும் உபயோகப் படுத்தி வருகிற விஷயம் நமக்கு நன்றுய்த் தெரியும். மற்ற தேசங்களில் எப்போது ஸ்டாண்டர்டு டயம் உபயோகப் படுத்தப்பட்டது எப்போது மாற்றப்பட்டது அப்படி மாற்றினதாலுண்டான ஸ்டாண்டர்டு டயம் வித்தியாசம் என்ன என்பதை விசாரணை செய்து தெரிந்து கொள்ளவேண்டும். மீ. ட என்ற குறிப்பு ... மீன் டயம் என்பதைக் குறிக்கும்.

ஸ். ட. என்ற குறிப்பு எழுத்துக்களே ஸ்டாண்டர்டு டயம் என்பதைக் குறிக்கவும் இந்தப் புத்தகம் முழுவதிலும் உபயோகப் படுத்தப்படும் என்று அறியவும்.

## எல்லா தேசங்களுக்கும் உபயோகப்படுத்த வேண்டிய பொது விதி:—

அயிட்டம் நெ. 5:—நாம் எந்த இடத்திற்கு எந்த வேளைக்கு லக்கின ஸ்புடம் கணிக்கவேண்டுமோ அந்த விடத்தை பி (P) என்ற குறிப்பெழுத்தால் குறிப்பிடுவோம். பி என்ற இடத்தில் கெடியாரத்தில் மேற்குறித்த வேளையில் மீன் டயத்தை உபயோகப்படுத்தி வந்திருந்தால் அந்த மீன் டயம் எந்தப் பட்டணத்தின் சுதேச மீன் டயமோ (அதாவது சுதேச கெடியாரமணியோ) அந்தப் பட்டணத்தை எம் (M) என்ற குறிப் பெழுத்துக்களால் குறிப்பிடுவோம். உதாரணமாக 1-1-1906 பகல் 12 மணிக்கு முன்னே சென்னை மாகாணத்தில் எல்லா விடங்களிலும் அதாவது சென்னை, தஞ்சாவூர், மதுரை முதலிய எல்லா ஜில்லாக்களிலும் கெடியாரத்தில் சென்னை சுதேசகெடியாரமணியை உபயோகப்படுத்தி வந்திருக்கின்றார்கள். ஆகையால் இங்கு எம் என்பது சென்னையைக் குறிக்கும். பி என்ற இடத்தில் கெடியாரத்தில் மேற்குறித்த வேளையில் ஸ்டாண்டர்டு டயத்தை உபயோகப்படுத்தி வந்திருந்தால் அந்த ஸ்டாண்டர்டு டயம் எந்த இடத்தின் சுதேச கெடியாரமணியோ அந்த இடத்தை எஸ் (S) என்ற குறிப்பு எழுத்துக்களால் குறிப்பிடுவோம். எந்த இடத்திற்குஇந்தப் புத்தகத்தின் 10-வது வாக்கியத்தில் அல்லது பஞ்சாங்களில் அல்லது வேறு எந்தப் புத்தகத்திலாவது நட்சத்திர ஹோரா மணி கொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்த இடத்தை ஜி (G) என்ற குறிப் பெழுத்தால் குறிப்பிடுவோம். இந்தப் புத்தகத்தின் 10 வது வாக்கியத்தில் கிரீன் விச்சு பட்டணத்திற்கு 1865 ஹு முதல் 1941 ம் ஹு வரையிலும் நட்சத்திர ஹோரா மணி கொடுத்திருப்பதால் இங்கு ஜி என்பது கிரீன்விச்சு பட்டணமாகும். சில சமயங்களில் பி என்ற இடமும் எம் என்ற இடமும் ஒரேவிடமாக நேரிடலாம். இவ்விதமாகவே சில சமயங்களில் பி என்ற இடமும் எஸ் என்ற இடமும் ஒரே விடமாக நேரிடலாம்.

---

# செக்ஷன் நெ. 2.

## இந்தப் புத்தகத்தில் கொடுத்துள்ள வாக்கியங்களை உபயோகப் படுத்தும் விதம்:—

### 1-வது வாக்கியம்.

அயிட்டம் நெ. 6:—இதில்கெடியார மணி பகல் 12 மணியிலிருந்து லக்கினஸ்புடம்கணிக்கவேண்டியகெடியாரமணிவரையிலும் செல்லான மொத்த கெடியார காலத்தை க்(கெ கா.) குறித்திருக்கிறது. கெ. கா. என்பது கெடியாரக் காலத்தைக் குறிக்கும் குறிப்பு எழுத்துக்கள். உதாரணமாக இரவு 10 மணி 56 நிமிஷம் 57 செக்கண்டிற்கு லக்கினம் கணிக்கவேண்டும் என்று வைத்துக்கொள்ளுவோம். பகல் 12 மணி முதல் இரவு 12 மணி வரையிலுமுள்ள காலத்திற்கு பி. எம். (P. M.) என்ற குறிப்பெழுத்தாலும் இரவு 12 மணி முதல் பகல் 12 மணி வரையிலுமுள்ள காலத்திற்கு எ. எம். (A. M.) என்ற குறிப்பெழுத்தாலும் குறிப்பிடுவது வழக்கம். பி. எம் என்பதில் பி வேறே எம் வேறே என்று பிறித்துப் பார்க்காமல் எப்போதும் ஒன்ருய்ச் சேர்த்து வாசிக்கவும். இவ்விதமாகவே எ. எம் என்பதில் எ வேறே எம் வேறே என்று பிரித்துப் பார்க்காமல் எப்போதும் ஒன்ருய்ச் சேர்த்து வாசிக்கவும். மேலே சொல்லிய இரவு 10 மணி-56 நிமிஷம்-57 செக்கண்டு என்பது 10 மணி-56 நிமிஷம்-57 செக்கண்டு. பி. எம். ஆகும். 1-வது வாக்கியத்தில் 1-வது கலத்தில் 10 பி. எம் என்பதற்கு எதிரில் 2-வது கலத்தில் 10 போட்டிருக்கிறது. இந்த 10 என்பது பகல் 12 மணி முதல் இரவு 10 மணி வரையிலும் 10 மணி நேரம் கெடியார காலம் செல்லானது என்று தெரிவிக்கும். இவ்விதமாகவே 1-வது கலத்தில் 10. எ. எம் என்பதற்கு எதிரில் 2-வது கலத்திலுள்ள 22 என்பது பகல் 12 மணி முதல் காலை 10 மணி வரையிலும் 22 மணி நேரம் கெடியார காலம் செல்லானது என்று தெரிவிக்கும். இவ்விதமாக நாம் உதாரணமாக மேலே எடுத்துக்கொண்ட இரவு .0 மணி-56 நிமிஷம் 57-செக்கண்டிற்குப் பகல் 12 மணி முதல் இரவு 10 மணி-56 நிமிஷம்-57 செக்கண்டு வரையிலும் சொல்லான கெடியார காலம் 10 மணி-56 நிமிஷம்-57 செக்கண்டு ஆகும். இந்தக் கெடியா

காலமாகிய கெ. கா என்பதைத் தான் 4-வது வாக்கியத்தின் தலைப்பில் கொடுத்திருக்கிறது. நமக்குக் கிடைக்கும்படியான கிரீன்விச்சு நட்சத்ர ஹோராதி மணி அல்லது வேறே எந்தப் பட்டணத்தின் நட்சத்திர ஹோராதி மணி பகல் 12-மணிக்குக் கொடுத்திருந்தால் தான் இந்த 1-வது வாக்கியத்தை உபயோகப்படுத்த வேண்டும், இவ்விதமன்றி நட்சத்திர ஹோராதி மணி இரவு 12-மணிக்குக் கொடுத்திருந்தால் 2-வது வாக்கியத்தை உபயோகப்படுத்த வேண்டும்.

## 2-வது வாக்கியம்.

அயிட்டம் நெ. 7:—இரண்டாவது வாக்கியம் ஒராவது வாக்கியத்தைப் போன்றது இதில் கெடியார மணி இரவு 12-மணியிலிருந்து லக்கின ஸ்புடம் கணிக்க வேண்டிய கெடியார மணி வரையிலும் செல்லான மொத்த கெடியார காலத்தைக் (கெ கா) குறித்திருக்கிறது. முன்னமே மேலே சொல்லிய பிரகாரம் நமக்குக் கிடைக்கக் கூடிய நட்சத்திர ஹோராதி மணி இரவு 12-மணிக்குக் கொடுத்திருந்தால் தான் இந்த 2-வது வாக்கியத்தை உபயோகப் படுத்த வேண்டும்.

## 3-வது வாக்கியம்.

அயிட்டம் நெ 8:—(1) நாம் லக்கின ஸ்புடம் கணிக்க வேண்டிய இடமாகிய பி என்ற இடத்திற்கும் நமக்குக் கிடைத்திருக்கும் உள்ள நட்சத்திர ஹோராதி மணி இடமாகிய ஜி என்ற இடத்திற்கும் உள்ள நட்சத்திர ஹோரா கால வித்தியாசத்தை இந்த வாக்கியத்தில் கொடுத்திருக்கிறது; இந்த வித்தியாசத்தை ரேகாம்ச திருத்தம் என்று சொல்லுவோம். ரேகாம்ச திருத்தத்தை ரே. தி என்ற குறிப்பெழுத்தால் குறிப்பிடுவோம்,

(2) பி. என்ற விடம் ஜி என்ற விடத்திற்குக் கிழக்கிலிருந்தால் ரே. தி. என்பது ருணக் குறியுடையது.

பி. என்ற விடம் ஜி என்ற விடத்திற்குக் மேற்கிலிருந்தால் ரே. தி. என்பது தனக் குறியுடையது.

(3) பி. என்ற விடத்தின் ரேகாம்சம் ஜி என்ற விடத்தின் ரேகாம்சத்தைவிட பெரியதாய் இருந்தால் பி. என்ற இடம் ஜி

என்ற இடத்திற்குக் கிழக்கேயுள்ளது. பி என்ற விடத்தின் ரேகாம்சம் ஜி என்ற விடத்தின் ரேகாம்சத்தை விட சிறியதாயிருந்தால் பி. என்ற விடம் ஜி என்ற விடத்திற்கு மேற்கிலுள்ளது என்று அறியவும். [இந்த (3) வது விதி பி. என்ற இடத்தின் ரேகாம்சம் கிழக்குரேகாம்சமாய் இருக்கும்போது தான் சரியாய் இருக்கும்; மேற்கு ரேகாம்சமாயிருக்கும் போது இந்த விதியை நேர் எதிரிடையாக மாற்றிக் கொள்ள வேண்டியது.]

இந்த வாக்கியத்தை உபயோகப் படுத்தும் விதத்தை சில உதாரணங்களால் விளக்கிக் காட்டுவோம்.

1-வது உதாரணம்:—நாம் லக்கின ஸ்புடம் கணிக்க வேண்டிய விடமாகிய பி என்பதை மதராஸ் என்று வைத்துக் கொள்ளுவோம். நமக்குக் கிடைத்திருக்கும் நட்சத்திர ஹோரா மணி இடமாகிய ஜி என்பதைக் கிரீன்விச்சு பட்டணம் என்று வைத்துக் கொள்ளுவோம். இவ்விரண்டு இடத்திற்கும் உள்ள ரேகாம்ச திருத்தத்தைக் கணிப்போம். மதராஸினுடைய ரேகாம்சம் 80 பாகை-14 கலை-47 விகலை கிழக்கு ஆகும். கிரீன்விச்சு பட்டணத்தின் ரேகாம்சம் 0 பாகை-00 கலை—00 விகலையாகும்.

| | | பா. கலை. விகலை. | |
|---|---|---|---|
| பி-மதராஸின் ரேகாம்சம் | = | 80-14-47 கி. | (1) |
| ஜி-கிரீன் விச்சின் ரேகாம்சம் | = | 0-00-00 | (2) |
| ரேகாம்ச வித்தியாசம் (1) லிருந்து (2) யைக் கழிக்க | = | 80-14-47 | (3) |

| ரேகாம்ச வித்தியாசம் பா. கலை: விகலை. | | | ரேகாம்ச திருத்தம். நட்சத்திர ஹோரா கால சக்கண்டு |
|---|---|---|---|
| 80—00—00-க்கு. ரே. தி. | | = | 52·57 |
| 0—10—00 | ,, | = | 00·110 |
| 0—04—00 | ,, | = | 00·044 |
| 0—00—40 | ,, | = | 00·007 |
| 0—00—07 | ,, | = | 00·001 |
| கூட்ட 80—14—47-க்கு. ரே. தி. | | = | 52·732 (4) |

ஆகையால் ரே. தி. 52·732 நட்சத்திர ஹோரா சக்கண்டு ஆகும். மதராஸ் கிழக்கு ரேகாம்சம் உடையதாலும், மதராவின் ரேகாம்சம் கிரீன்விச்சின் ரேகாம்சத்தைவிட பெரியதானதாலும் அயிட்டம் நெ. 8. (2), (3) பிரகாரம் இந்த ரே. தி. ருணக் குறியுடையது, அதாவது ரேகாம்ச திருத்தம்—52 732 நட்சத்திர ஹோரா சக்கண்டு ஆகும்.

2-வது உதாரணம்:—நாம் லக்கின ஸ்புடம் கணிக்கவேண்டிய விடமாகிய பி என்பதை கோடைக்கானல் என்ற ஊர் உன்று வைத்துக் கொள்ளுவோம். நமக்குக் கிடைத்திருக்கும் நட்சத்திர ஹோரா மணி இடமாகிய ஜி என்பதை மதராஸ் என்று வைத்துக் கொள்ளுவோம். இவ்விரண்டு இடத்திற்கும் உள்ள ரேகாம்ச திருத்தத்தைக் கணிப்போம். மதராவினுடைய ரேகாம்சம் 80 பாகை-14 கலை-47 விகலை கிழக்கு ஆகும். கோடைக்கானலின் ரேகாம்சம் 77 பாகை-28 கலை-00 விகலை கிழக்கு ஆகும்.

| | | பா. கலை, விகலை | |
|---|---|---|---|
| பி-கோடைக்கானலின் ரேகாம்சம் | = | 77—28—00 கி. | (1) |
| ஜி-மதராவின் ரேகாம்சம் | = | 80—14—47 கி. | (2) |
| ரேகாம்ச வித்தியாசம் (2) லிருந்து (1)யைக் கழிக்க | = | 2—46—47 | (3) |

| ரேகாம்ச வித்தியாசம். பா. கலை. விகலை. | | | ரேகாம்ச திருத்தம். நட்சற்திர ஹோரா கால சக்கண்டு. |
|---|---|---|---|
| 2—00—00க்கு. ரே. தி. | | = | 01·31 |
| 0—40—00 | ,, | = | 00·440 |
| 0—06—00 | ,, | = | 00·066 |
| 0—00—40 | ,, | = | 00.007 |
| 0—00—07 | ,, | = | 00.001 |
| கூட்ட 2-46-47-க்கு. ரே. தி. | | = | 01.824 (4) |

ஆகையால் ரே. தி. 01·824 நட்சத்திர ஹோரா சக்கண்டு ஆகும் கோடைக் காணல் கிழக்கு ரேகாம்சம் உடையதாலும், கோடைக்கானலில் ரேகாம்சம் மதராவின் ரேகாம்சத்தைவிட சிறியதானதாவும் அயிட்டம் நெ. 8 (2), (3) பிரகாரம் இந்த ரே. தி.

தனக்குறியுடையது. அதாவது ரேகாம்ச திருத்தம்+01·824 நட்சத்திர ஹோரா சக்கண்டு ஆகும்.

## 4-வது வாக்கியம்

அயிட்டம் நெ. **9**:—இந்த 4-வது வாக்கியத்தினுதவியால் ஒரு குறித்த கெடியாரக் காலத்திற்குச் சமானமான நட்சத்திர ஹோராதி காலத்தை அறியலாம்; அதாவது ஒரு கெடியாரக் கால அளவை நட்சத்திர ஹோராதிகால அளவாக மாற்றிவிடலாம். கீழே கொடுத்துள்ள உதாரணத்தால் இந்த வாக்கியத்தை உபயோகப் படுத்தும் விதம் விளங்கும்.

உதாரணம் :—10 மணி-56 நிமிஷம்-57 சக்கண்டு என்ற கெடியாரக் கால அளவை நட்சத்திர ஹோராதி கால அளவாக மாற்றவும்:—

| | கெடியாரக் காலம் கெ. கா. மணி. நிமி. சக்கண்டு | | நட்சத்திராதி காலம் ந. கா. மணி. நிமி. சக்கண்டு |
|---|---|---|---|
| | 10—00—00 க்கு | = | 10—01—38·565 |
| | 0—56—00 ,, | = | 0—56—09·199 |
| | 0—00—57 ,, | = | 0—00—57·156 |
| கூட்ட | 10—56—57 க்கு | = | 10—58—44·920 |

ஆகையால் கெடியாரக் கால அளவாகிய 10 மணி-56 நிமிஷம்-58 சக்கண்டு என்பது நட்சத்திர கால அளவில் 10 மணி-58 நிமிஷம்-44·92 சக்கண்டு ஆகும்.

## 5-வது வாக்கியம்

அயிட்டம் நெ. **10**:—இந்த வாக்கியத்தால் சுதேசத் திருத்தம் என்றதைத் கணிக்கலாம். சுதேச திருத்தம் என்பதை சு. தி. என்ற குறிப்பெழுத்துக்களால் குறிப்பிடுவோம். சுதேச திருத்தம் என்பது ஒரு இடத்து சுதேச கெடியார டயத்திற்கும் மற்றொரு விடத்தின் சுதேச கெடியார டயத்திற்கும் உள்ள வித்தியாசமாகும். சுதேச கெடியார டயம் என்பதும் சுதேச கெடியார மணி என்பதும் ஒரே அர்த்தம் உள்ளவை என்று அறியவும். இந்த வாக்கியத்தை உபயோகப் படுத்தும் விதம் ஒரு உதாரணத்தினால் விளக்கிக் காட்டுவோம்.

உதாரணம்:—மதாரசுக்கும் கோடைக்கானல் என்ற ஊருக்கும் உள்ள சுதேச கெடியார டயத்தின் வித்தியாசமாகிய சுதேச திருத்தத்தைக் கணிப்போம்.

| | |
|---|---|
| மதராவின் ரேகாம்சம் | =80 பாகை-14 கலை-47·10 விகலை |
| கோடைக்கானலின் ரேகாம்சம் | =77 பாகை-28 கலை-00 விகலை |
| ரேகாம்ச வித்தியாம் | = 2 பாகை-46 கலை-47·10 விகலை |
| | = 2 பாகை-46 கலை 47 விகலையாகும். |

| பாகை. கலை. விகலை. | | மணி. நிமி. சக் |
|---|---|---|
| 2—00—00-க்கு, சு. தி. | = | 0—08—00 |
| 0—46—00-க்கு, ,, | = | 0—03—04 |
| 0—00—47-க்கு, ,, | = | 0—00—03·133 |
| கூட்ட 2—46—47-க்கு. சு. தி. | = | 0—11—07·133 |
| | = | 0—11—07 ஆகும். |

ஆகையால் சுதேச திருத்தம் 0 மணி-11 நிமிஷம்-07 சக்கண்டு ஆகும்.

## 6-வது வாக்கியம்.

அயிட்டம் நெ. **11**:—இந்த வாக்கியத்தில் சில முக்கியமான தேசங்களிலும் பட்டணத்திலும் உபயோகப் படுத்தப்பட்டு வந்த அல்லது உபயோகப் படுத்தப்பட்டு வரும் ஸ்டாண்டர்டு மணிக்கும் கிரீன்விச்சு சுதேச மணிக்கும் உள்ள வித்தியாசத்தையும் அந்த வித்தியாசம் எந்த ரேகாம்சத்திற்குச் சுதேச மணியாகும் என்பதையும் கொடுத்திருக்கிறது, இந்த வித்தியாசத்தை ஸ்டாண்டர்டு மணி வித்தியாசம் என்று சொல்லுவோம். ஸ்டாண்டர்டு மணியைக் கால அனுகூலத்தை அனுசரித்து அடிக்கடி மாற்றக் கூடுமாகையால் கணிதர்கள் ஒவ்வொரு தேசத்திற்குரிய ஸ்டாண்டர்டு மணி வித்தியாசத்தை அப்போதுக்கப் போது விசாரணை மூலமாய்த் தெரிந்து கொள்வது அவசியம். உதாரணமாக பெடரேட்டடு மலையா ஸ்டேட்டில் ஸ்டாண்டர்டு மணி வித்தியாசத்தை 7 மணி-00 நிமிஷம்-00 சக்கண்டில் இருந்து 7 மணி-20 நிமிஷம்-00 சக்கண்டாக 1936 வருஷத்தி

லிருந்து மாற்றிவிட்டிருக்கிறார்கள். சுமார் 70, 80 வயதுச் பட்டவர்களுடைய ஜாதகங்களைக் கணிதர்கள் கணிக்க வே பாலும் நேரிடுமாகையால் இந்தக்காலத்திற்குள் ஸ்டாண்டர்டு வித்தியாசம் எப்படியிருந்ததென்று நமக்குத் தேவையான தேசத்திற்குத் தெரிந்து கொள்ளுவது நன்று. ஒவ்வொரு கணி ரும் தனக்குரிய தேசத்திற்கு அப்போதைக்கப்போது தன் சொ உபயோகத்திற்காக 6-வது வாக்கியத்தைப் போன்ற வாக்கியம் தயார் செய்து கொள்வது நலம். உதாரணமா 6-வது வாக்கியத்தில் 3-வது கலத்திலுள்ள 82 பாகை-30 கலை விகலை என்பதற்கு 5-வது வாக்கியத்திலிருந்து கணிக்க 5 ம 30 நிமிஷம்-00 சக்கண்டு வரும்.

## 7-வது வாக்கியம்.

அயிட்டம் நெ. **12**:—இந்த வாக்கியத்தினுதவியால் குறித்தத் தேதிக்கு அயனாம்சம் கணிக்கலாம். இந்த வாக்கியத் 1925-ம் வருஷத்திற்கு எதிரில் 2-வது கலத்தில் அயனாம்சம் என்பது 0 பாகை-0 கலை-00 விகலை என்று போட்டிருப்பதை கவனிக்கவும், இந்தப் பதிவு சம்மந்தமாய் 1-வது கலத் 1925-ம் வருஷம் என்பது 13-4-1925 யைக் குறிக்கும். இவ் மாகவே 1-வது கலத்தில் கண்டுள்ள ஒவ்வொரு வருஷ அவ்வருஷத்திய ஏப்ரல் மாதம் 13-ந் தேதியைக் குறிக் ஆகையால் 2-வது கலத்தில் கொடுத்துள்ள எ என்பதற் பதிவுகள் அந்தந்த வருஷத்தில் ஏப்ரல் மாதம் 13-ந் தேதி எ என்பது எவ்வளவு என்று தெரிவிக்கும். இந்த என்பது 1915-ம் வருஷத்திற்குப் பிந்தியுள்ள வருஷங்களுக் தனக் குறி உடையது; 1925-ம் வருஷத்திற்குப் முந்தியுள்ள ஷங்களுக்கு ருணக் குறியுடையது. அந்த வாக்கியத்தின் த பில் அயனாம்சம்=22°-40′-39″+எ என்று போட்டிருப்பது பார்க்கவும். 1925-ம் வருஷங்களுக்குப் பிந்தியுள்ள வருஷ ளுக்கு 22°-40′-39″ என்றதுடன் அந்த வருஷத்திற்கு எதி 2-வது கலத்தில் எ என்றதின் கீழ் கொடுத்துள்ளத் தொகையை கூட்டினால் அந்த வருஷத்தில் ஏப்ரல் மாதம் 13 ந் தேதிக்கு உ அயனாம்சம் வரும். இவ்விதமாகவே 1925-ம் வருஷங்களுக் முந்தியுள்ள வருஷங்களுக்கு 22°-40′-39″ என்பதிலிருந்து அ வருஷத்திற்கு எதிரில் 2-வது கலத்தில் எ. என்றதின் கீழ் கொ துள்ளத் தொகையைக் கழித்தால் அந்த வருஷத்தில் ஏப்

மாதம் 13-ந் தேதிக்கு உரிய அயனும்சம் வரும். இவ்விதமாகவே 1925-ம் வருஷத்திற்கு எதிரில் கொடுத்துள்ள எ என்றதின் தொகையாகிய 0°-0′-00″ என்பதை 22°-40′-39″ என்பதுடன் கூட்ட (அல்லது கழிக்க) 22°-40′-39″ வரும். இந்த 22°-40′-39″ என்பது 1925-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக்கு உரிய அயனும்சம் ஆகும். ஒவ்வொரு வருஷத்திலும் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக்கு உரிய அயனும்சத்தைக் கணிக்கும் வழியை அடியிற்கண்ட உதாரணத்தால் விளக்கிக் காட்டுவோம்.

உதாரணம் நெ. (1):—13-4-1840 க்குரிய அயனும்சத்தைக் கணிப்போம். தலைப்பில் கொடுத்துள்ள நிலையான தொகை 22°-40′-39″. இதிலிருந்து 1840 க்கு எதிரில் எ என்றதின் கீழ் 2-வது கலத்தில் கொடுத்துள்ள 1°-11′-12″ யைக் கழிக்க 21°-29′-27 வரும். இந்த 21°-29′-27″ தான் 13-4-1840க்குரிய அயனும்சம் ஆகும்.

உதாரணம் நெ. (2):—13-4-1930 க்குரிய அயனும்சத்தைக் கணிப்போம். தலைப்பில் கொடுத்துள்ள நிலையான தொகை 22°-40′-39″ ஆகும். இத்துடன் 1930 க்கு எதிரில் 2-வது கலத்தில் எ என்றதின் கீழ் கொடுத்துள்ள 0°-4′-12″யைக் கூட்ட 22°-44′-51″ வரும். இந்த 22°-44′-51″ தான் 13-4-1930 க்குரிய அயனும்சம் ஆகும்.

## 8-வது வாக்கியம்.

அயிட்டம் நெ. **13**:—இந்த வாக்கியத்தினுதவியால் நமக்குத் தேவையான தினத்திற்கு அயனும்சம் கணிக்கலாம். 7-வது வாக்கியத்தினுதவியால் நமக்குத் தேவையான வருஷத்தில் ஏப்ரல் மாதம் 13-ந் தேதிக்கு உரிய அயனும்சத்தை 7-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தப் படும் வழியில் காட்டிய பிரகாரம் கணிக்கலாம். அந்த வருஷத்தில் ஏப்ரல் மாதம் 13-ந் தேதியிலிருந்து நமக்குத் தேவையான தேதி வரையிலும் செல்லான சொச்ச தினங்களை அறியவும். அந்தச் சொச்சத் தினங்களுக்கு 8-வது வாக்கியத்தில் 2-வது கலத்தில் பி. (b) என்றதின் கீழ் கொடுத்துள்ள தொகையைக் கூட்டவும். இப்படிச் செய்தால் நமக்குத் தேவையான தேதிக்குரிய அயனும்சம் துல்லியமாகக் கிடைக்கும்.

உதாரணம்:—7-5-1930-ம் தேதிக்குரிய அயனும்சத்[தை] கணிப்போம். 13—4—1930 க்கு அயனும்சம் 22°-44′-51″ என்[று] 7-வது வாக்கியத்தின் கீழ் கொடுத்துள்ள 2-வது உதாரணம் [பிர]காரம் கணித்திருக்கிறோம். 13—4—1930 முதல் நமக்குத் தே[வை]யான தேதியாகிய 7—5—1930 வரையிலும் செல்லான செ[ல்]தினம் 23 தினம் ஆகும். இந்த 23 தினத்திற்கு 8-வது வாக்கி[ய] பிரகாரம் கீழ் கண்டபடி 3·1 விகலை ஆகும். இந்த 3·1 விகலை

| | |
|---|---|
| | 13-4-1930 க்கு வந்த அயனும்சமா[கிய] |
| தினம்—பி | 22°-44′-51″ உடன் கூட்ட வருகி[ற] |
| 20 க்கு=2·7 | 22°-44′-54·1 தான் 7-5-1930 க்கு உ[ரிய] |
| 3 க்கு=0″·4 | அயனும்சம் ஆகும். 7 வது, 8-வது. வாக்கி[யங்]களாகிய இரண்டு வாக்கியங்களையும் [ஒ]- |
| 23 க்கு=3″ 1 | தடவையில் உபயோகப்படுத்தி 7-5-19[30] க்குரிய அயனும்சத்தை அடியிற்கண்ட[படி] |

கணிப்போம்.

| | | ° ′ ″ | |
|---|---|---|---|
| நிலையான தொகை | = | 22-40-39 | (7-வது வாக்கியம் பார்க்க) (1) |
| 1930-க்குரிய „ | = | 0-04-12 | ( „ „ ) (2) |
| 13-4-1930 க்கு | = | 22-44-51 | ( (1) ம் (2)ம் கூட்ட ) (3) |
| 20 தினத்திற்கு | = | 0-00-2·7 | ( 8 வது வாக்கியம் பார்க்க) (4) |
| 3 தினத்திற்கு | = | 0-00-0.4 | ( „ „ ) (5) |
| 7-5-1930 க்கு | = | 22-44-54·1 | [(3) ம் (4) ம் கூட்ட] |

அல்லது= 22 பாகை–45 கலை ஆகும்

ஆகையால் 7-5-1930 க்கு அயனும்சம் 22°-45′ ஆகும்.

குறிப்பு:—8-வதுவாக்கியத்தில் கொடுத்துள்ள பி (b) என்[ப]தும் அயிட்டம் நெ. (5) ல் சொல்லிய பி (P) என்பதும் வெவ்[வே]றுனவை என்று அறியவும்.

## 9-வாக்கியம்

அயிட்டம் நெ. 14:—இந்த வாக்கியத்தினுதவியால் [ஒ]குறித்த இடத்திற்கு லக்கின ஸ்புடம் தசம ஸ்புடம் இவைக[ளை] கணிக்கவேண்டிய ஒரு குறித்த காலத்திற்கு நட்சத்திர ஹோ[ரா] மணி நிமிஷம் சக்கண்டு தெரிந்தால் அந்தக் குறித்த இடத்தி[ல்] அந்தக் குறித்த காலத்திற்கு லக்கின ஸ்புடமும் தசம ஸ்புட[மும்] கணிக்கலாம்.

இந்த 9-வது வாக்கி ம் அக்ஷாம்சம் பாகை 0 முதல் அக்ஷாம்சம் பாகை 36 வரையிலும் உள்ள முழு பாகைளுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்தில் 1-வது கலத்தில் நட்சத்திர ஹோரை 12 நிமிஷத்திற்கு ஒரு தரம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இந்த நட்சத்திர ஹோரைக் குரிய உதைய லக்கினமும் தசம லக்கினமும் 2-வது கலத்திலும் 3-வது கலத்திலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நமக்குத் தேவையான நட்சத்திர ஹோரை மணி நிமிஷம் 1-வது கலத்தில் கொடுத்திராமலிருந்தால் அது 1-வது கலத்தில் கொடுத்துள்ள எந்த இரண்டு நட்சத்திர மணி நிமிஷங்களுக்கு இடையில் இருக்கின்றது என்று பார்த்து அந்த இரண்டு நட்சத்திர மணி நிமிஷங்களுக்கு எதிரில் 2-வது கலத்தில் அல்லது 3-வதுகலத்தில் கொடுத்திருக்கின்றதொகைகளை எடுத்துக்கொண்டு நமக்குவேண்டிய நட்சத்திர ஹோரா மணி நிமிஷத்திற்குத் திரைராசிக் கணிதம் பிரகாரம் உதைய லக்கினமும் தசம லக்கினமும் கணிக்கவும். நட்சத்திர ஹோரை சம்மந்தப்பட்ட வரையிலும் இவ்விதமாக உதைய லக்கினமும் தசம லக்கினமும் கணிக்கவும். மேலும் அக்ஷாம்சம் சம்மந்தப் பட்டபோது உதைய லக்கின ஸ்புடம் அக்ஷாம்சம் பாகை 0 முதல் அக்ஷாம்சம் பாகை 36 வரையிலுமுள்ள பாகைகளில் ஒவ்வொரு முழு பாகைக்கும் வித்தியாசத்துடன் கொடுக்கப் பட்டிருக்கின்றது. ஒரு அக்ஷாம்ச முழு பாகைக்கும் அதற்கு அடுத்த அக்ஷாம்ச முழு பாகைக்கும் இடையிலுள்ள அக்ஷாம்ச பாகை கலைக்கு உதைய லக்கினம் தேவையானல் இவ்விரண்டு முழு அக்ஷாம்ச பாகைகளுக்கு 2-வது கலத்தில் கொடுத்துள்ள தொகையிலிருந்து திரை ராசிக் கணிதம் பிரகாரம் கணிக்க வேண்டியது. தசம லக்கின ஸ்புடம் அக்ஷாம்சம் பாகை 0 முதல் அக்ஷாம்சம் பாகை 36 வரையிலும் வித்தியாசமில்லாமல் ஒரு மாதிரியாய் இருப்பதால் நமக்கு வேண்டிய அக்ஷாம்சம் பாகை கலைக்கு மேற் சொல்லியபடி திரை ராசிக் கணிதப் பிரகாரம் அக்ஷாம்சத்திற்காகக் கணிக்க வேண்டிய அவசியமில்லை, ஆனல் நமக்கு வேண்டிய நட்சத்திர ஹோரை மணி நிமிஷத்திற்கு மாத்திரம் தசம லக்கினம் திரை ராசிகம் பிரகாரம் முந்தி சொல்லிய பிரகாரம் கணிக்க வேண்டும்.

குறிப்பு:—உதைய லக்கினம் மாத்திரம் நட்சத்திர ஹோரை அக்ஷாம்சம் ஆகிய இவ்விரண்டையும் அனுசரித்து மாறுக்

கொண்டு இருக்கிறது. ஆகையால் உதைய லக்கினம் கணிக்கும் போது முதலில் அக்ஷாம்ச வித்தியாசத்தைக் கவனியாமல் நட்சத்திர ஹோரை வித்தியாசத்திற்கு மாத்திரம் திரை ராசிகம் பிரகாரம் கணிக்கவும். பிறகு இப்படிக் கணித்து வந்த நட்சத்திர ஹோரை மணி நிமிஷத்திற்கு அக்ஷாம்ச வித்தியாசத்தை எடுத்துக் கொண்டு அக்ஷாம்ச பாகை கலைக்குத் திரை ராசிகம் பிரகாரம் கணிக்கவும். தசம லக்கினம் நட்சத்திர ஹோரையை மாத்திரம் அனுசரித்து மாறிக் கொண்டு இருக்கிறதால் அக்ஷாம்ச வித்தியாசத்தைக் கவனிக்க வேண்டிய அவசியமே இல்லை. நட்சத்திர வித்தியாசத்தை மாத்திரம் கவனித்து திரை ராசிகம் பிரகாரம் நமக்குவேண்டிய நட்சத்திர ஹோரா மணி நிமிஷத்திற்கு மாத்திரம் கணிக்க வேண்டியது.

மேலே இதுவரையிலும் சொல்லிய விஷயங்களை உதாரணத்தால் விளக்கிக்காட்டுவோம்.

உதாரணம் நெ. (1):—மதராஸில் 7-5-1930 ல் மாலை இந்திய ஸ்டாண்டர்டு மணி 4 மணி 3 நிமிஷம் 30 சக்கண்டுக்கு நட்சத்திர ஹோரை மணி 6-52 நிமிஷம் 40 சக்கண்டு ஆனால் அப்போது உதைய லக்கின ஸ்புடம், தசம லக்கின ஸ்புடம் இவைகளைக் கணிப்போம். மதராஸுக்கு உரிய அக்ஷாம்சம் 13°-04' வடக்கு ரேகாம்சம் 80°-14'-47". 10 கிழக்கு ஆகும்.

முதலில் உதைய லக்கின ஸ்புடத்தை எடுத்துக் கொள்வோம்:—நமக்கு வேண்டிய இடமாகிய மதராஸின் அக்ஷாம்சம் 13 பாகை-04 கலை. இந்த 13 பாகை-04 கலை என்பது 13 பாகைக்கும் 14 பாகைக்கும் இடையில் உள்ளது. ஆகையால் நாம் 13 பாகை, 14 பாகை இவைகளுக்கு உரிய தொகைகளை 9-வது வாக்கியத்தில் இந்த உதாரணம் முழுவதிலும் கவனிக்கவேண்டும். நட்சத்திர ஹோரை 6 மணி-52 நிமிஷம்-40 சக்கண்டு என்பது நட்சத்திர ஹோரை 6 மணி-48 நிமிஷத்திற்கும், நட்சத்திர ஹோரை 7மணி—00 நிமிஷத்திற்கும் இடையில் இருக்கிறது. ஆகையால் இவ்விரண்டு நட்சத்திர ஹோரைகளுக்கு உரிய தொகைகளை 9-வது வாக்கியத்தில் இந்த உதாரணம் முழுவதிலும் கவனிக்க வேண்டும்.

(a) பிறகு, முதலில் 13 பாகையை எடுத்துக் கொள்வோம்:— அக்ஷாம்சம் 13 பாகை வடக்கு என்றதில் 1-வது கலத்தில் நட்சத்திர ஹோரை மணி 6-48 நிமிஷத்திற்கு எதிரில் உதைய லக்கினம் 191 பா-53 கலை என்று 2-வது கலத்தில் போட்டிருப்பது அக்ஷாம்சம் 13 பாகை வடக்கு உள்ள இடத்தில் நட்சத்திர ஹோரை மணி 6-48 நிமிஷத்திற்கு உதைய லக்கின ஸ்புடம் 191 பாகை-53 கலை ஆகிறது என்று தெரிவிக்கும். இவ்விதமாகவே நட்சத்திர ஹோரை மணி 6-48 நிமிஷத்திற்கு எதிரில் 3-வது கலத்தில் தசம லக்கினம் 101 பாகை-02 கலை என்று போட்டிருப்பது நட்சத்திர ஹோரை மணி 6-48 நிமிஷத்திற்குத் தசம லக்கினம் 101 பாகை-02 கலை ஆகிறது என்று தெரிவிக்கும்.

| | நட்சத்திர ஹோரை | | | உதைய லக்கின ஸ்புடம் | | |
|---|---|---|---|---|---|---|
| | மணி நிமி சக் | | | பாகை கலை விகலை | | |
| | 7-00-00 | க்கு | = | 194-50-00 | ஆகும் | (1) |
| | 6-48-00 | ,, | = | 191-53-00 | ,, | (2) |
| வித்தியாசம் | 0-12-00 | ,, | = | 2-57-00 | ,, | (3) [1 லிருந்து 2 யைக் கழிக்க] |

மணி 0-12 நிமிஷம்-00 சக்கண்டு என்பதைச் சக்கண்டாக மாற்ற 720 சக்கண்டு ஆகும். பாகை 2-57 கலை-00 விகலை என்பதை விகலையாக மாற்ற 10620 விகலை ஆகும். நமக்குத் தேவையான நட்சத்திர ஹோரையாகிய 6 மணி-52 நிமிஷம்-40 சக்கண்டுக்கும் நாம் எடுத்துக் கொண்ட நட்சத்திர ஹோரை 6 மணி-48 நிமிஷம்-00 சக்கண்டுக்கும் வித்தியாசம் மணி 0-04 நிமிஷம்-40 சக்கண்டு. இந்த 0 மணி-4 நிமிஷம்-40 சக்கண்டு என்பதைச் சக்கண்டாக மாற்ற 280 சக்கண்டு ஆகும். நட்சத்திர ஹோரை வித்தியாசம் 720 சக்கண்டுக்கு உதைய லக்கின ஸ்புட வித்தியாசம் 10620 விகலையானால் நட்சத்திர ஹோரை வித்தியாசம் 280 சக்கண்டுக்கு உதைய லக்கின ஸ்புடம் எவ்வளவு என்று இப்போது திரை ராசிக் கணிதம் பிரகாரம் கணிக்கவேண்டியது. அதாவது 10620 விகலையை 280 ஆல் பெருக்கி 720 ஆல் வகுக்க வருகின்ற ஈவு விகலையே 280 சக்கண்டுக்கு வருகின்ற உதைய லக்கின ஸ்புட வித்தியாசம் ஆகும். இப்படிச் செய்ய 1 பாகை-8 கலை 50-விகலை வரும். இதை நட்சத்திர ஹோரை மணி 6-48 நிமிஷம்-00 சக்கண்டுக்கு உரிய உதைய லக்கின ஸ்புடமாகிய 191-பாகை-53 கலை-

00 விகலையுடன் கூட்ட 193 பாகை-01 கலை-50 விகலை அல்லது 193 பாகை-02 கலை வரும். இந்த 193 பாகை 02 கலை தான் அக்ஷாம்சம் 13 பாகை உள்ள இடத்திற்கு நட்சத்திர ஹோரை 6 மணி-52 விமிஷம்-40 சக்கண்டுக்கு உதைய லக்கின ஸ்புடம் ஆகும்.

இந்த 193 பாகை 02 கலையைக் கணித்து வந்த வழியை அடிக்கடி உபயோகப்படுத்த வேண்டியதாக நேரிடுமாகையால் இந்த வழியைக் கீழ்கண்டபடி சுருக்கமாகத் கணித சுலபத்திற்காக எழுதிக் காட்டப்படும்.

ROUGH-WORK ரப் ஒர்க்கு

```
      10620
        280
    -------
     849600
     21240
  ---------
720) 2973600 (4130
     2880
     ----
       936
       720
      ----
      2160
      2160
      ----
4130 விகலை ஆகும்
```

```
60) 4130 (68 கலை
    360
    ---
     530
     480
     ---
      50 விகலை
60) 68 கலை (1 பாகை
    60
    --
     8 கலை.
(4) அதாவது  1 பா-8க -50வி
(2)       191 பா-53க-00வி
```

(4) ம் (2) ம் கூட்ட 193 பாகை 01 கலை-50 விகலை அல்லது= 193 பாகை-02 கலை ஆகும்.

* (a) இடம்-பாகை 13-0 கலை வடக்கு

நட்சத்திர ஹோரை உதைய லக்கின ஸ்புடம்

| | மணி. விமி. சக் | | பா. கலை, வி. | |
|---|---|---|---|---|
| 9-வது வாக்கியம்.... | 7-00-00 | க்கு | 194-50-00 | (1) வி |
| ,, ,, .... | 6-48-00 | ,, | 191-53-00 | (2) ,, |
| வித்தியாசம் | 0-12-00 | ,, | 2-57-00 | (3) ,, |
| | | | (1 லிருந்து 2 யைக் கழிக்க) | |
| கோரிய மணி | 6-52-40 | | | (4) |
| கோரிய வித்தியாசம் | 0-04-40 | | | (5) [4 |

லிருந்து 2 யைக் கழிக்க

| | |
|---|---|
| கோரிய வித்தியாசம் 0-04-40 க்குத் திரைராசிகம் பிரகாரம் | 1-08-50 (6) |
| (2)ம் (6)ம் கூட்ட 6-52-40 க்கு .... | 193-01-50 ஆகும். |
| | =193 பாகை-02 கலை ஆகும் (7) |

(b) பிறகு இவ்விதமாகவே இடம்-பாகை 14-0 கலை வடக்குக்) குக் கணிப்போம்:—

| | நட்சத்திர ஹோரை மணி. வி. சக். | | உதைய லக்கின ஸ்புடம் பா. கலை. வி. | |
|---|---|---|---|---|
| 9—வது வாக்கியம்.... | 7-00-00 | க்கு | 194-43-00 | (1) ஆகும். |
| ,, ,, .... | 6-48-00 | ,, | 191-48-00 | (2) ,, |
| வித்தியாசம் | 0-12-00 | ,, | 2-55-00 | (3) (1 லிருந்து 2யைக் கழிக்க |
| கோரிய மணி | 6-52-40 | | | (4) ,, |
| கோரிய வித்தியாசம் | 0-04-40 | | | (5) ,, 4 லிருந்து 2யைக் கழிக்க) |
| கோரிய வித்தியாசம் 0-04-40 க்குத் திரைராசிகம் பிரகாரம் | | ,, | 1-08-03 | (6) |
| (2)ம் (6)ம் கூட்ட | 6-52-40 | க்கு | 192-56-03 | ஆகும். |

அல்லது 192 பாகை-56 கலை (7) ஆகும்

இந்த 192 பாகை-56 கலைதான் அக்ஷாம்சம் 14 பாகை உள்ள இடத்திற்கு நட்சத்திர ஹோரை மணி 6-52 நிமிஷம் 40 சக்கண்டுக்கு உதைய லக்கின ஸ்புடம் ஆகும்.

(c) பிறகு இடம் பாகை 13-0 கலைக்கு உதைய லக்கின ஸ்புடம் 193 பாகை 02-கலையும், இடம் பாகை 14-0 கலைக்கு உதைய லக்கின ஸ்புடம் 192 பாகை 56 கலையுமானல் இடம் 13-பாகை 04-கலைக்கு உதைய லக்கின ஸ்புடம் திரை ராசிக கணிதம் பிரகாரம் கணிக்கவும்.

